# திருப்பராய்த்துறை - சம்பந்தர் தேவாரம்:

<-- திருப்பராய்த்துறை

(1)
நீறுசேர்வதொர் மேனியர்; நேரிழை
கூறு சேர்வதொர் கோலமாய்ப்
பாறுசேர் தலைக்கையர் பராய்த்துறை
ஆறுசேர் சடை அண்ணலே

(2)
கந்த மாமலர்க் கொன்றை கமழ்சடை
வந்த பூம்புனல் வைத்தவர்
பைந்தண் மாதவி சூழ்ந்த பராய்த்துறை
அந்தமில்ல அடிகளே

(3)
வேதர்; வேதமெல்லாம் உறையால் விரித்து
ஓத நின்ற ஒருவனார்
பாதி பெண்ணுரு ஆவர்; பராய்த்துறை
ஆதியாய அடிகளே

(4)
தோலும் தம்அரையாடை; சுடர்விடு
நூலும் தாம்அணி மார்பினர்
பாலுநெய் பயின்றாடு பராய்த்துறை
ஆலநீழல் அடிகளே

(5)
விரவி நீறுமெய் பூசுவர் மேனிமேல்
இரவில்நின்று எரியாடுவர்
பரவினார் அவர் வேதம் பராய்த்துறை
அரவம் ஆர்த்த அடிகளே

(6)
மறையும் ஓதுவர்; மான்மறிக் கையினர்
கறைகொள் கண்டம் உடையவர்
பறையும் சங்கும் ஒலிசெய் பராய்த்துறை
அறைய நின்ற அடிகளே

(7)
விடையும் ஏறுவர்; வெண்பொடிப் பூசுவர்
சடையில் கங்கை தரித்தவர்
படைகொள் வெண்மழுவாளர்; பராய்த்துறை
அடைய நின்ற அடிகளே

(8)
தருக்கின் மிக்க தசக்கிரிவன் தனை
நெருக்கினார் விரல் ஒன்றினால்
பருக்கினார் அவர் போலும் பராய்த்துறை
அருக்கன் தன்னை அடிகளே

(9)
நாற்ற மாமலரானொடு மாலுமாய்த்
தோற்றமும் அறியாதவர்
பாற்றினார் வினையான பராய்த்துறை
ஆற்றல் மிக்க அடிகளே

(10)
திருவிலிச் சில தேரமண் ஆதர்கள்
உருவிலா உரை கொள்ளேலும்
பருவிலால் எயிலெய்து பராய்த்துறை
மருவினான் தனை வாழ்த்துமே

(11)
செல்வ மல்கிய செல்வர் பராய்த்துறைச்
செல்வர் மேல் சிதையாதன
செல்வன் ஞானசம்பந்தன் செந்தமிழ்
செல்வமாம் இவை செப்பவே